ஓம்

# கிருஷ்ணோபநிடதம்.





கருவூர்

கிருஷ்ண மந்திர வேதாந்தாசிரமம்



சென்னை

திருவொற்றியூரான்

வேத மொழிபெயர்புக் காரியாலய வெளியீடு.

ஓம்

அதர்வண வேதத்திலுள்ள

# கிருஷ்ணோபநிடதம்.



இது

வேத மொழிபெயர்ப்பாசிரியர்

காசிவாசி - சிவானந்த யதீந்திர சுவாமிகளால்

மொழி பெயர்க்கப்பட்டு



கருவூர்

சி. கிருஷ்ணசாமி நாயுடு அவர்களால்

பதிப்பித்து

நன்கொடையாக

அளிக்கப்பெற்றது.

1935.

B



கருவூர் வேதாந்தாசிரமம் என்னும்

கிருஷ்ண மந்திரத்திலுள்ள மூர்த்தி.

ஓம்

அதர்வண வேதத்திலுள்ள

# கிருஷ்ணோபநிடதம்.



இது

வேத மொழிபெயர்ப்பாசிரியர்

காசிவாசி - சிவானந்த யதீந்திர சுவாமிகளால்

மொழி பெயர்க்கப்பட்டு



கருவூர்

சி. கிருஷ்ணசாமி நாயுடு அவர்களால்

பதிப்பித்து

நன்கொடையாக

அளிக்கப்பெற்றது.

1935.

உ

கணபதி துணை.

---

திருவளர்ம லர்ச்சோலை சூழ்ந்தகரு வூரினிற்
றிகழாம்பி ராவதிநதிச்
சீர்க்கரையி லுறுகிருட் டினமந்தி ரப்பெயர்த்
திவ்யவே தாந்தபவனம்

தெருளொடுவி ருத்திபெற வுங்கிருட் டினமூர்த்தி
தேவவவ தாரவுண்மை
தெரியவும் பல்லோர்க்கு முபகார மாகவே
செம்மையதர் வணவேதநூல்

மருவியில குங்கிருட் டினவுப நிடத்தினை
வயங்குசெந் தமிழ்மொழியினில்
மகாகாசி வாசிச் சிவானந்த யதியாய
மாதவேந் திரர்தந்தனர்

பொருதிரைகொள் வாரியுண் டோங்குமா மேகம்
புதுப்புனற் செழுமழைதனைப்
பொழிதல்போ லும்புண் ணியச்செயலி தற்கெவர்
புரிந்திடுவர் கைம்மாறரோ

அடியார்க்கடியார்.

உ

ஓம் நமோ நாராயணாய

# கிருஷ்ணோபநிடதம்

# முன்னுரை.

---

ஈண்டு, கரையிலாமாகடல் வரைவுடன் நிற்றலானும், பேரொளிப் பெருங்கதிர் சீரொடு உதித்தொடுங்கலானும், எங்குமாய்ப் பொங்கு தீ தங்கி இங்கடங்கி யிருத்தலானும், இரங்காது உயிர்களை யெடுத்துணுங்காலன் வருங்கால நியமத்தில் இருத்தலானும், அளவிலாப் பாரமுடைய அண்டங்கள் பலவும் அமிழாது நிற்றலானும், மற்றும், பல தேவர்களும் தத்தமது செய்தொழிலை வழுவின்றிச்செய்து வரலானும், இவ்வாறு செய்விக்கின்ற கடவுள் ஒருவர் உண்டென்பது எம் மதத்திற்குஞ் சம்மதமேயாம்.

இனி, அக்கடவுள், வேறு வேறுருவும் வேறு வேறியற்கையும், நூறு நூறுயிரமியல்புடையராய் நிற்றலின் அவைகளின் உண்மையறியாதார் பலர் மதப்போரிடுவர். உண்மை யறிந்துகொண்டவ ராயினும் மதப்பேய் பிடிக்கப் பட்டு விவர்தமிடுவார் சிலர். ஒன்றுமறியாது ஐதிகமாய்க் கேட்டுக்கொண்டு கதறித் திரிவர் கணக்கிலார். பெரும்பான்மை சமயசன்மார்க்கர்களும் குழப்ப முற்றனர். சுத்த சன்மார்க்கப் பெருநிலையில் நின்றவர்க்கே உண்மை தெரியும்.

அற்றாகலினன்றே கண்ணபிரானும்,

மாயு மாயைமறை யாத நெஞ்சினிடை
மற்றெ றுண்மையினை வாய்மையா
லேயு மாறுற வறிந்துளோர்க ளறி
யாத தொன்றுமிலை யென்னினும்
மாயு மாறு டரனேகர் பாலொருவ
னென்னை யாயுமனம் வைத்துளா
ருயு மாறுட ரனேகர் பாலொருவ
னேயறிந் துமுடி வானையா.

என்று திருவாய் மலர்ந்தருளினர்.

உற்றுநோக்கில் மனதிற்கியைந்ததோர் உருவத்தை வைத்து வழிபடாத மதம் ஒன்றுமேயில்லை. மற்றுமாராயின் போரிடாததும், பட்சபாதமில்லாததும், உண்மையாகியதோர் உறுதிப் பொருளைக் கொண்டதுமாகிய ஒரு மதம் தேடினுங் கிடைக்கமாட்டாது. மதப்பற்றின் மிகுதியால் சாதிப் பற்றையும், மெய்ப்பொருளுணர்ச்சியால் மதப்பற்றையும் அறவொழித்தவர்க்குத் தனது மதம்போல் எல்லா மதமும் உண்மை மதமென்றே தோன்றும். அஃதிலார்க்குப் பிற ருடைய மதம் போன்று தனது மதமும் உண்மை மத மென்று தெள்ளிதிற் றோன்றாது, மூட நம்பிக்கையிருக்கி னும் பயன்றரா தென்றுணர்க.

மற்றும்,

அன்பினுயினு மாசையினுயினும்
வன்பயத்தின் வைரத்தினுயினும்

நன்பெருந் திருநாதனையே நினைந்
தின்பமவ்வுயி ரெய்துவ தென்பதை,

என்னும் பாகவத வாக்கின்படி, அன்பினாலேனும், ஆசையாலேனும், வலிந்த பயத்தாலேனும், வைரத்தாலேனும், மற்றும் பலவகை நம்பிக்கையாலேனும், மறையோதுவான் முதற்கொண்டு மாடுமேய்ப்பான் ஈறாக எல்லாமக்களும் கடவுளைத் தத்தமது மனப் பாங்கின்படி வழிபட்டவ ரென்பதும், வழிபடுகின்றவ ரென்பதும், மேல்வழிபடுவா ரென்பதும் நமது நாடொன்றிலேயே மலை விளக்காம்.

இவ்விஷயத்தையே சுவாமி விவேகானந்தரும் மேல் நாடெங்கும் பசு மரத்தாணி போன்று நிறுவினர். அதன் அறி குறியாகவே அமெரிக்காவில், விலங்கின் மனங்களையும் கவரச் செய்கின்ற கண்ணபிரானுடைய திருவுருவத்தைத் தாபித்து அவர்களையும் வழிபடுமாறுஞ் செய்துள்ளார்.

இனி, உலகவழக்கில் பலவகைத் தெய்வங்களிருப்பினும் விஷ்ணு வெனப் பெயர் பூண்டு காத்தற் றொழிலைச் செய்கின்ற வியாபகராகிய ஒரு பெருங் கடவுளே ஒவ்வொரு ஊழிக் காலங்களிலும் எல்லாவுயிர்களும் தொல்லைக் கடலில் அமிழ்ந்து நிற்கும்போது தாமே அருட்டிருமேனி கொண்டெழுந் தருளுவர் என்பதை எடுத்துக் கூறாத நூலொன்று மில்லை யென்பதும் யாவருமறிந்த விஷயமே.

அற்றாகவினன்றே, மண்ணுலகேத்தவும், விண்ணுலகுய்யவும், அத்துவிதக் கொள்கை மூன்றுலகமும் பாவுவித்தற் பொருட்டே அவதரித்தருளிய கண்ணபிரானும் தமது கீதையில்,

சாவாது பிறவாது தனிமுதலா யிருந்தான்
ஆவாவிவ் வுலகுபடு மழிதுயர் தீர்ப்பதற்காக
மேவாது நின்றேயென் மாயையினுல் மெய்யேபோல்
ஓவாது பிறந்திடுவே னுகந்தோறு முகந்தோறும்,

என்றருளியுள்ளார்.

இங்கு, அருவராகிய பகவானுனவர் அருட்டிருமேனி கொண்டருளுவர் என்பது, ஏந்திழைபால் இல்லா முலைப் பாலும், கண்ணீரும் உருப்பெற்றெழுகுவது போன்று உற்று நோக்குவார்க்கு அன்பு காரணமாய்த் தெற்றென விளங்கும். அஃதிலாது கடவுளுக்கு அருளுருவத் திரு மேனியே யில்லை யென்பார், தருக்கித்து வினுவுவோர் களின் வாய்ப்பட்டு இடர்ப்படுவர்.

இனி, கண்ணபிரானது திருவவதாரத்தின் பயன் பூமி பாரந் தொலைத்தலா மெனலும், அன்பரைக் காத்து வம்ப ரைக் காய்ந்து தம் பெரும் அறத்தை நிறுவலாமெனலும், பிரமாணங்களாலும், கண்ணபிரானுடைய திருவாக்காலும் தூலமாய் ஒருவாறு புலப்படினும், மூன்றுலகிற்கும் அத்து வித நெறியை யறிவுறுத்தலே கண்ணபிரானது திருவவதா ரத்தின் முக்கியப் பயன் எனக்கொள்ளலே அறிவுடையாரின் கடனுகும்.

'இதுபற்றியே

........................................................................ ஞானப்
"பொருட்கதி ரில்லா தாமே பூந்துழா யலங்கன் மாலை
அருட்கடல் பிறந்தி லாயே லாழிசூ ழுலகை மம்மா"

என்னும் பாகவதத் திருவாக்கும் இப்பொருளையே வற் புறுத்துகின்றது.

மற்றும்,

'ஞானப் பொருட்கதிர் விரித்த புத்தேள்'

என்னுந் திருவாக்கும் இதையே யுணர்த்துகின்றது.

இதனாலன்றோ, தத், துவம், அசி என்னும் மூன்று பதங்களின் பொருளையே, பதினெட்டு அத்தியாயமாயுள்ள கீதையும், முறையே ஆறு, ஆறு அத்தியாயங்களாற் கூறுகின்றது என்றார் மதுசூதன சரசுவதியாரும்.

மற்றும்,

"அறத்தை யினிது பாதுகாத்தற் பொருட்டு ஊழி தொறும் ஊழிதொறும் பிறப்பேன்" என்னும்

கண்ணபிரான் திருவாக்கிற்கும், எல்லா அறங்களின் பயனாகிய தத்துவ ஞானமென்னும் பேரறத்தைப் பாது காப்பதற்குப் பகவான் திருவவதாரஞ் செய்தருளுவர் என்று கொள்ளலே நல்லறிவாளரின் புலமை வழியின் பயனாகும். அற்றாகலினன்றே தமிழ்மறையும்,

"மனத்துக்கண் மாசில னாத லனைத்தறன்
ஆகுல நீர பிற" என்று கூறுகின்றது.

அன்றியும், கண்ணபிரான் அருச்சுனற்குத் தேர் செலுத்துவோனாய்ப் போர் முன்னிலையில் கீதையை உபதேசித்தது, அப் போர் செய்வதற்கே என்று கொள்ளுதல் அத்துணைப் பொருத்தமுடையது மன்றாம்; ஏனெனின்?

"மூன்றுலக நன்மையின்பொருட்டு மொழிந்த கீதை" என்று ஆன்றோர் கூறியிருத்தலி னென்க. கீதையானது கரும யோகத்தையே மேற் கொண்டதாம் என்பாருக்கும் இது ஒவ்வும், என்னை? முத்தியை விரும்பிலும், தனது கருமத்தையும், பக்தியையும் பயனில் இச்சையற்றுச் செய்தல் வேண்டும். ஞானத்தைப் பெற்றபோதும், உலக உபகாரத்தின் பொருட்டாகிய ஞானியின் விவகாரத்தைச் செய்தல் வேண்டும், அது பாரகாரியமானாலும் பலர்க்குப் பரமாக நேரதாகவே செய்தலே முறையாமாதலினென்க. இதற்கு எடுத்துக் காட்டு கண்ணபிரானே யாவர். மற்றும்,

பெரியவர் பயின்ற படியலாற் பயிலார்
பின்புளோ ரென்பதன் றுகி
லுரியவிவ் வுலக மூன்றினு மெனக்குச்
செய்யவேண்டு வதுமொன் றுண்டோ
வரியவை யென்னு லுறுதவு முறுதற்
பாலவு மியாவையிங் கையா
பரியவிவ்வுலக மகிழ்வுடன் வினைதான் பண்ணுதற்
கென்னையும் பாராய் என்று,

இதையே கண்ணபிரானுந் தாமே ஒப்புக்கொள்கின்றனர்.

ஈண்டு, இவ்வாற்றால் உலகத்தைச் சீர்திருத்தலும் தத்துவ ஞானியின் கடனென்பதுணர்க.

உற்று நோக்கின் கண்ணபிரானுடைய திருச்செயல்களும் உண்மை ஞானிகளின் செயல்களையே விளக்குகின்

றன. இதுகொண்டே அருச்சுனன், திடப்பிரக்ஞன் எவ்வாறு பேசுவன்? எவ்வாறிருப்பன்? எவ்வாறு நடப்பன்? என்று கீதையில் வினவியதற்குக் கண்ணபிரான் விரிவாய் விடை கூறியுள்ளார் என்பது உற்றுநோக்கத்தக்கது.

ஆயர் குல மாதர்களிடத்தில் அபேதமாகிய ஞான பத்தியே யிருந்தது; அது காமமுடையாருக்கே காமவின்ப மாய்த் தோன்றுகின்றது.

அல்லது, காமவின்பத்தில் கண்ணபிரான் மையல் கொண்டவரெனினும் இழுக்கில்லை ஏனெனின்? இயற்கைத் தத்துவ ஞானியாகிய கண்ணபிரானுக்கு அதுவுமொரு விளையாட்டா மாதலினென்க.

இதுபற்றியே வேதாந்தநூல்களும்,

"மாதர் மயக்கிடையுற்று இவ்வாறு, அலகிறந்த நடையுறினும் அருள் விளையாட்டென்றே அவன்றனை நம்புக ஐயமொரு சிறிது முறுமல்"

என்று கூறுகின்றன. இதையே, ஞானிகட்கு, கர்த்திருத் தன்மை, போக்திருத்தன்மை யின்மையின் யாதுசெய்யினும் ஞானிக்கு இன்ப துன்பமில்லை யென்று சுருதிகளனைத்தும் முழங்குகின்றன.

அஃதன்றியும் அத்துவிதக் கொள்கைக்கு ஆசிரியர்களின் மரபைக்கூறுங்காலும் விஷ்ணுவையே முதலாவது ஆசிரியராக எடுத்திருத்தல் பற்றியும் விஷ்ணுவின் வடிவே

யாகிய கண்ணபிரானும் அத்துவித ஆசிரியரென்றே துணிந்து கூறலாம். விரிக்கிற் பெருகுமாதலின் எடுத்துக் கொண்டதின்மேற் செல்வாம்.

கருவூர், சி. கிருஷ்ணசாமி நாயுடு, அவர்கள் மேற்காட்டியவைகளை, கிருப்பதி சுவாமிகள் முதலிய பல பெரியாரிடத்து அணுகிய தொண்டராயிருந்து கேட்டுணர்ந்ததின் பயனாகவே, கருவூரில், "கிருஷ்ண மந்திர வேதாந்தாசிரமம்" எனத் திருநாமஞ் சூட்டி, ஒரு அரிய பெரிய ஆசிரமத்தை அமைத்துள்ளாரென்றே தோன்றுகின்றது.

மற்றும், தனது முயற்சியாற் றேடிய பொருளைக் கொண்டே அவ்வாசிரமத்தை யமைத்ததுடன் நில்லாது அன்பின் பெருக்கால் தனது தனத்தை அவ்வாசிரமத்திற்கு நிலைத்த ஊதியமாகவைத்து, அதில், பெரியாரைப் பேணல், ஞான நூல் பயிலல், தத்துவமாராய்தல் முதலியன என்றும் நடந்து வருமாறு செய்வதுடன், தானும் மனைவியும் மற்றைய குமாரத்திகள் முதலிய சுற்றத்தார்களும் அதில் ஈடுபடுமாறு செய்துவருதல் பலரும் வியக்கத்தக்க பெருங் குணமேயாம். மேலும் அவ்வாறே நடந்து வருமாறு கண்ணபிரான் திருவருள் புரிவாராக.

மற்றும், நாயுடு அவர்களின் கிருஷ்ணமந்திர வேதாந்தாசிரமத் திறப்புவிழாவிற் கூடிய அவைக்கு எம்மைத் தலைமையாகவைத்து நடாத்திய அன்பின் பெருக்கிற்கும், அவ்வாறு முற்றுவித்த கண்ணபிரானுடைய திருவருட்கும் கட்டுப்பட்டு அவ் வாசிரமத்தின் திருப் பெயரின் அறிகுறி

யாகவே இந்த, கிருஷ்ணோபநிடதத்தைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளோம். இதுவும், ஜீ. ஏ. ஜோகப், என்னுந் துரையவர்களால் கல்கத்தாவில் அச்சிட்ட பிரதிக் கிணங்க மொழி பெயர்க்கப் பட்டிருக்கின்றது. இதில் நாராயண தீபிகை என்னும் வடமொழி யுரையைத் தழுவிய பதவுரை யும் பொழிப்புரையும் எழுதியிருக்கின்றனம். பாம்பே அச்சுப் பிரதியில் உள்ள சில இதனோடு மாறுபட்டிருக் கின்றது. ஆனால் இதுவே உபநிடதப் போக்கிற்கு ஒத்த தென்று தோன்றுகின்றது.

இதை, பதிப்பித்து வெளியிட்டு கைம்மாறு கருதாது நன்கொடையாக அளித்த நமது கருவூர், சி. கிருஷ்ணசாமி நாயுடு அவர்களுக்குத் தமிழுலகம் நன்றிசெலுத்துமாறு திருவருளை வேண்டுகின்றனம்.

இங்ஙனம்

வேத மொழிபெயர்ப்பாசிரியராகிய

இந்நூல் மொழி பெயர்ப்பாசிரியர்

காசிவாசி-சிவானந்த யதீந்திர சுவாமிகள்.

சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்

வித்துவான், பண்டித,

வெ. சு. சுப்பிரமணியாச்சாரியர் அவர்கள்

இயற்றிய

# சிறப்புப் பாயிரம்.

---

நிலைமண்டில ஆசிரியப்பா.

குணகடல் குடகடல் குமரி வேங்கடம்
எனுநான் கெல்லை யிருந்தமிழ் வரைப்பில்
பங்கமில் புகழுடைக் கொங்குமண் டலத்தே
பாவலர் புகழும் பழங்குடிச் சேரர்
தனிப்பெறுஞ் சீருறு தலைநக ராகிய

அபாண்டம் செய்தே ஆருயிர் சிதைத்த
விபாண்டக னென்ற வேடுவ மகனும்
சிவனடி யாரின் சிந்தை நொந்திட
அவம்செய் வோரை அரிந்த பக்தரும்
அருமறை யேவிய அருந்தவ மியற்றிக்

கருவிடை மீண்ட கருவூர்த் தேவரும்
மகத்துவ நிறைந்த அகத்தியன் வெருள
வட்டமா கடல்சூழ் விசாலை நகராள்
குட்டங் கொண்ட கோபித ரத்துவனும்
நொச்சி யாயினும் காந்தை யாயினும்

பச்சிலை யிட்டுப் பரவு மன்பரும்
பெரும்பே றெய்திடப் பேணிய கண்ணுதல்

இருந்திடும் கருவூர்ப் பெருந்திரு நகரில்
அருங்கலை விநோதர் அன்பா ருளத்தர்
பெருந்தகை யாளர் பேரறி வுடையோர்

கிருட்ண சாமி நாயுடு என்றிடும்
பொருட்டுறை போகிய புண்ணிய சீலர்
காண்டகு சிறப்பின் ஆண்டா ளம்மையாம்
இல்லக் கிழத்தியை இயல்புடன் பெற்றோர்
ஈட்டிய பொருளால் எடுத்தனர் நிலையம்

தேவகி யென்பாள் திருவயிற் றுதித்துக்
கஞ்சனை வென்று வஞ்சம் ஒழித்தும்
களிறும் விளவும் களிங்கனும் சகடமும்
ஒளிருமா மருதமும் விளிய வீட்டியும்
கோவிய ராடையைக் கோட்டிலே கரந்தும்

ஆண்டகைப் பார்த்தன் அணிமிகு தேரினை
மூண்டநற் போரினில் தூண்டியும் அவற்கு
ஞானமும் அருளிய கீதா சாரியாய்த்
துவரா பதியருள் தூய்தரு கண்ணனார்
திருப்பெயர் அதனையே தீட்டுவான் வேண்டிக்

கிருட்ண மந்திர வேதாந்தாச் சிரமம்
என்றொரு பெயரை ஏந்த லீந்தனர்
அப்பெயர் விளங்கவும் அறிவுநூல் கற்கவும்
தத்துவ மாய்தல் தவத்தின ரோம்பல்
ஆகிய செயல்க ளனைத்தையு மியற்றப்

போதிய பொருளைப் போதியாங் கமைத்துத்
திறப்பு விழாவிற் றலைமை வகிக்க
அருளு மன்பும் ஆர்ந்திடு நெஞ்சினர்
விருப்பும் வெறுப்பும் வேண்டா விழுமியோர்
முருகா ருளத்தர் திருகா மனத்தர்

தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளர்
தவத்தினர் போற்றும் தபோநிதி அண்ணல்
வடமொழி தென்மொழி யாதிய கலைகளைத்
திடம்பெற உணர்ந்தநற் றிண்ணறி வுடையோர்
தத்துவ மாய்ந்த தனிப்பெருந் தயாபரர்

வித்தக ஞானம் விளம்பிடு மேலோர்
வேத மொழிபெயர்ப் பாளரென் றேத்திடும்
மாதவ காசிவாழ் சிவானந்த யதீந்திரர்
அருளினை வேண்டினர் வேண்டிய வாறே
வகித்தனர் தலைமை யதனறி குறியாப்

பெயர்த்தனர் கிருட்ண உபநிட தத்தினைத்
தென்மொழி யாகப் பதித்தன ரதனைப்
பண்ணவன் மண்ணிற் பயன்கரு தாது
அளித்தனர் அனைவரும் இன்புறு மாறே.





கிருஷ்ண பரமாத்மனே நம:

## அதர்வண வேதத்திலுள்ள

# கிருஷ்ணோபநிடதம்.

---

ஈண்டு, பிரம வித்தையைத் துதித்தற்பொருட்டு ஒரு கதை வடிவாய் உபநிடதந் தொடங்கப்படுகின்றது.

உருத்திரன் முதலிய தேவர்கள், தாம் மண்ணில் அவதரித்தல் உறுதியா மென்றுணர்ந்து, உருவமெடுத்து வருவதிற் பயமுற்றவர்களாய், அங்குக் கண்ணபிரானை யடையில் யாம் உய்வோம் என்றெண்ணி, ஆதி தேவராகிய விஷ்ணு மூர்த்தியினிடத்தில் தமது குறைகளை வேண்டிக் கொள்கின்றார்கள்.

உரைப்பர் வானநாட் டுருத்திரன் முதலிய வும்பர்
தரைக்கண் டோன்றுத றடையிலை யெனவுணர்ந் தங்குக்
கருக்குட் சேர்ந்துருக் கலங்கிடுங் கடுந்துயர் கண்டே
அருச்சித் தாழியங் கையனை யடைந்திவ ணன்றே.

## மந்திரம் 1.

**ते होचुस्तं सुराः सर्वे भगवन्तं सनातनम् ।**
**नोऽवद्यमवतारान् वै गृह्यन्ते नैव भूतले ॥ १ ॥**

அழித லற்றவெம் மமுதனே யறுகுணத் தரசே
யிழிவு மிக்குள விருநிலத் தவதா மெடுக்கோம்
பழியு மன்றியப் பவத்துறல் பகருதற் கெளிதோ
ஒழியி தென்றவ ருலகினை யளந்தவர்க் குரைத்தார். (1)

### பதவுரை.

| | |
|---|---|
| ते सुराः | அத் தேவர்கள் |
| सर्वे | அனைவரும், |
| सनातनं | என்று முள்ளவரும், |
| भगवन्तं | பகவருமாகிய |
| तं | அவ் விஷ்ணுமூர்த்தியை நோக்கி |
| नः | யாங்கள் |
| अवद्यं वै | (மண்ணிற் பிறத்தல்) பழிப்புடையதேயாம் ஆதலின் |
| भूतले | பூமியின்கண் |
| अवतारान् | அவதாரங்களை |
| नैव गृह्यन्ते | எடுக்கவே மாட்டோம். |
| (इति) | (என்று) |
| होचुः | சொன்னார்கள் என்றவாறு. |

### பொழிப்புரை.

உருத்திரன் முதலிய தேவர்கள், மண்ணுலகத்தில் எண்ணமுடியாத துன்பமா மாதலின் அங்கு நாங்கள் மனிதர்

களாய்ப் பிறக்க மாட்டோம் என, அழியாதவரும், அறு குணங்களை யுடையவருமாகிய விஷ்ணு மூர்த்திக்குக் கூறி ஞர்கள் என்பதாம். இது, கிருஷ்ண பரமான்மா எல்லாமா யிருக்கின்ரு ரென்பதை இனிது விளக்குதற் பொருட் டெழுந்த தென்றுணர்க. (1)

குறிப்பு:— "சச்சிதானந்தராகிய விஷ்ணு மூர்த்தியின் அவதாரமே யாகியவரும், பேரழகுடைய திருமேனிகொண் டவருமாகிய இராமபிரானைக் கண்டு வனத்திலுள்ள முனிவர் கள் வியப்படைந்து, எங்களுடைய பிறப்புகள் பயனடையு மாறு தேவரீரைத் தழுவிக்கொள்ளுகின்ருேம் என்று வேண் டிக் கொண்டதற்கு, அவர், மேலெடுக்கும் கிருஷ்ணவதாரத் தில் 'நீவிர் ஆயர்குல மாதர்களாகி எம்மைத் தழுவிக்கொண் டுய்வீர்களாக' என இராமபிராஞகிய விஷ்ணுமூர்த்தி யருளிச் செய்தனர்" என்று சில பிரதிகளில் பாட பேதங் காணப் படுகின்றது. ஆனல் இந்நூலிலுள்ள பாடத்தைத் தழுவிய பொருளே உபநிடதப்போக்கிற்கு ஒத்ததா மென்றும், மற் றும், "மூன்ருவது சுலோகத்தில், உருத்திரர் முதலியோர் களின் சொல்லைக் கேட்டு" என்றும், உருத்திரர் முதலிய தேவர்களே வேணு முதலிய அவதாரங்களை யெடுத்தார்க ளென்று கூறி யிருத்தலானும், உருத்திரர் முதலியோர் களே, வேணு, குடை முதலியவைகளாகவும், ஆயர் குல மாதர்களாகவும் அவதரித்தனர் என்பதே ஈண்டைக்கியை புடையதாமெனப் புலப்படுகின்றது. 'அவத்யம்' என்ப தற்கு, பகவானே! நினது தசாவதாரங்கள் நினது சத்தைத் தவிர்த்து வேறிலாமையின் நீயே யென்றும், நின்னை யடை தற் பொருட்டே நினது அவ்தாரங்களென்றும் யாவரு முணர்கின்றனர் என்பர் சிலர்.

## மந்திரம் 2.

**आज्ञयाऽवतारांस्ते हि * गोपान्नः स्त्रीश्च नो कुरु ।**
**अन्यो न विग्रहं धत्ते तवाङ्ग स्पर्शनादिना ॥ २ ॥**

*தள்ள ரும்நின தாணையாற் றரைமிசை யாங்கள்*
*கொள்ளு வம்வடி வாயராங் குலத்தினிற் றோன்ற*
*லெள்ள லுன்னிலெம் மேனியை யினிதுறத் தீண்டற்*
*குள்ளு வந்திடில் வேண்டுவ மொழிந்தன வேண்டேம்.* (2)

பதவுரை.

| | |
|---|---|
| हि | உண்மையில் |
| ते | உன்னுடைய |
| आज्ञया | ஆணையால் |
| अवतारान् | அவதாரங்களை |
| (गृह्णीमः) | (எடுக்கின்றோம் ஆனால்) |
| नः | எங்களை |
| गोपान् | இடையர்களாகவும், |
| स्त्रीश्च | இடைச்சியர்களாகவும் |
| नों कुरु | (பிறக்குமாறு) செய்யாதே (மற்றும்) |
| तव | உனது |

* गोपांस्तत्स्त्रीश्च, गोपास्त्रीणि, गोपास्त्रास्त्राणि, என்பன பாட பேதங்கள்.

| | |
|---|---|
| अङ्गं | திருமேனியை, |
| स्पर्शनादिना | தழுவுதற்குரித்தலாத |
| अन्य: | ஏனைய மனித வுடம்பையும் |
| न धत्ते | கொடுக்காதே. எ-று. |

பொழிப்புரை.

பகவானே! உனது திருவுளப் பாங்கின்படி மண்ணில் யாம் அவதரிக்கின்றோம், ஆனால் எம்மை மூடர்களான ஆயர் குல மக்களாகும்படி பணிக்காதருள்வாயாக என்று தேவர்கள் வேண்டிக்கொண்டனர். இவ்வண்ணங் கேட்டுக் கொண்டமையினானே, பிரமனை ஒரு கைக் கோலாகவும், உருத்திரனை வேணுகவும், இந்திரனைக் கொம்பாகவும் தோன்றுமாறு அருள் செய்துள்ளார் என்பதும் ஈண்டு உணரற்பாலதாம். அல்லது, ஆயர்குல பாலகா! நீ எம்மை, வேணு, கைக்கோல் முதலியவைகளாகச் செய்துகொண்டருள்வாயாக என்பதே வேண்டுகோளாய்க் கொள்ளினுமமையும் என்பதாம்.

குறிப்பு :— அவித்தையை யுபாதியாகக் கொண்ட கற்பித சீவர்களாக வெளிப்படல் அத்தியாச வாயிலாகத் துன்பத்திற்கிடமா மாதலின் பல்வகைச் சீவர்களாகத் தோற்றல் வேண்டா மென்பது கருத்து என்பர் சிலர்.

மற்றும், ஒருவருக் கொருவர் தழுவிக் கொள்ளத் தக்க ஆயர் குல மாதர்களாய் யாங்கள் அவதரிக்கின்றோம். எங்களை இடையறாது தழுவிக் கொண்டிருப்பாயாக எனக் கூறினார்கள் என்பது பாட பேதம்.

## மந்திரம் 3.

**शश्वत्स्पर्शार्पितेऽस्माकं गृह्यन्तेऽवतारान् वयम् ।**
**रुद्रादीनां वचः श्रुत्वा प्रोवाच भगवान् स्वयम् ॥ ३ ॥**

*இன்பி லெங்களை யிடையறு திசைந்தணை வாமென்*
*றன்பெ ழுந்தருள் புரிவையே லவதா மேற்பம்*
*என்று ருத்திரர் முதலிய விமையவர் கூற*
*அன்ற லர்ந்தசெங் கமலநற் கண்ண னு மருள்வான்.* (3)

பதவுரை

| | |
|---|---|
| शश्वत् | எப்பொழுதும் |
| अस्माकं | எங்களை, |
| स्पर्शार्पिते | தீண்டுவதாக வரங்கொடுக்கில் |
| वयं | நாங்களும் |
| अवतारान् | அவதாரங்களை |
| गृह्यन्ते | எடுக்கின்றோம் (என்னும்) |
| रुद्रादीनां | உருத்திரர் முதலியோர்களின் |
| वचः | வாக்கியத்தை, |
| श्रुत्वा | கேட்டு |
| भगवान् | விஷ்ணுபகவான் |
| स्वयं | தானே |
| प्रवोच | அருளிச் செய்கின்றார். எ-று. |

பொழிப்புரை.

*அங்ஙனமாகில், நீர் எக்காலும் எங்களுடைய உடம்புகளைத் தழுவிக் கொண்டிருப்பதாக வாக்களிக்கில், நாங்களும்*

மண்ணிற் பிறக்கின்றோம் என்று உருத்திரர் முதலிய தேவர்களின் வேண்டுகோளுக்குப் பகவானும் இசைந்துகொண்டு மேல் அருளிச் செய்கின்றார். (3)

குறிப்பு:—'எம்முடைய ஆரோபவடிவங்களை யொழித்து அதிட்டானமாகிய நினதோடு சேர்த்துக் கொள்வாயாக' என்பதே வேண்டுகோளின் கருத்தென்பர் சிலர்.

## மந்திரம் 4.

अङ्ग सङ्गं करिष्यामि भवद्वाक्यं करोम्यहम् ।
मोदितास्ते सुराः सर्वे कृत कृत्याऽधुना वयम् ॥ ४ ॥

பெற்ற தேவர்கா ளுளமெழு பெட்புடன் றரையில்
சுற்றி யாமுவந் தணைந்துமைச் சொற்றவா புரிந்து
பற்று வாமெனப் பயமறும் பண்ணவர் களித்து
முற்றும் யாம்வினை முடித்தன மின்றென மொழிந்தார். (4)

### பதவுரை.

| | |
|---|---|
| भवद्वाक्यं | தாங்கள் சொன்ன வண்ணம் |
| अहं | யான் |
| करोमि | செய்கின்றேன் |
| अङ्ग सङ्गं | உங்களுடம்பைத் தழுவுதலையும் |
| करिष्यामि | செய்வேன் என்றனர். |
| ते सुरा सर्वे | அதைக் கேட்ட, அத் தேவர்களனைவரும் |
| मोदिताः | களிப்புற்றார்கள், (களித்து) |
| वयं | யாம் |

अधुना — இப்போது

कृतकृत्याः — செயற்பாலன முழுதும் செய்தவர்களானோ மென்றனர். எ-று.

பொழிப்புரை.

தேவர்கள், எங்களைத் தழுவிக்கொள்ள வேண்டுமென்று வேண்டிக் கொண்டதற்கு, பகவானும் இணங்கி, நீவிர் கேட்டவாறே செய்கின்றேன், உங்களுடைய உடம்புகளையும் எப்பொழுதும் தீண்டுவேன் என்றருளினர். அதைக் கேட்ட அத் தேவர்கள், யாங்கள் இன்றே செயற்பாலன வினைத்துஞ் செய்து முடித்தவர்களானோம் என்று பேருவகை கொண்டனர் என்பதாம்.

குறிப்பு:— சிவப்பிரம அபேதங் கூடிய விடத்து கருத்துருத்தன்மை, போக்திருத்தன்மைகள் அறவொழிந்தமையின் செயற்பாலன முடிந்தன வென்றுணர்க என்பர் சிலர். (4)

## தேவர்கள் அவதரித்தல்.

## மந்திரம் 5.

**योनन्दः परमानन्दो यशोदा मुक्ति गेहिनी ।**
**मायासा त्रिविधा प्रोक्ता सत्वराजस तामसी ॥ ५ ॥**

வேறு.

நண்ணுறு பிரமவா னந்தமும் நந்தனாய்
மண்ணதி லுதித்தது மற்றைய சோதையும்
எண்ணிடிற் பரகதி யென்னுமி லக்குமி
மண்ணுமுக் குணமதில் மாயையு மூன்றரோ. (5)

### பதவுரை.

| | |
|---|---|
| यः | யாதொன்று |
| परमानन्दः | பரமானந்தவடிவாயுள்ளதோ (அதுவே,) |
| नन्दः | நந்தகோபராவர். |
| मुक्ति गेहिनी | முத்தி யிலக்குமியே |
| यशोदा | யசோதை யாவள். |
| सा माया | அம் மாயையானது |
| सत्व राजस तामसी | சாத்விகம், இராசதம், தாமத மென |
| त्रिधा | மூவகையாக, |
| प्रोक्ता | சொல்லப்படுகின்றது. |

### பொழிப்புரை.

தேவர்கள் மண்ணிற் றோன்றுவதில், முதலாவது பிரமானந்த மென்பதே நந்தகோபராக வந்தது. முத்தியிலக்குமி யென்பவள் யசோதை யாயினள். மாயாவி யெனப்படும் விஷ்ணுவின் மாயையானது முக்குண வசத்தால் மூவகைப் படும். கண்ணபிரான் பிரமானந்த வடிவிலுதித்தவராதலின் நந்தர் பிரமானந்தவடிவர் எனப்பட்டனர். அத்தகைய பிரமானந்தம் முத்தியி லநுவிக்கப்படுவதா மாதலின் முத்தி யிலக்குமியே யசோதை யெனப்பட்டனள். அமரரையும், அசுரரையும் வேறு பிரித்தற் பொருட்டு மாயை வகுக்கப் படுகின்றது.

குறிப்பு:—இதனல் எல்லாம் பிரம சொரூபமே யென்று உணரப்படுதலின் ஒருபொருளே பல்வேறு வகையாய் நிற் கின்றதென்பதும், உண்மையி லுள்ளது அத் துவிதியமே யென்பதும் பெறப்பட்டமை காண்க என்பர் சிலர்.

## மந்திரம் 6.

**प्रोक्ता सात्वीच रुद्रे सा भक्ते ब्रह्मणि राजसी ।**
**तामसी दैत्यपक्षेतु माया त्रेधाह्युदाहृता ॥ ६ ॥**

உன்னிய சாத்விக முருத்திரன் பாலதாம்
பின்னுள ராசதம் பிரமனைச் சேர்ந்ததே
அன்னிய தாமத மசுரர்கட் கானதாம்
இன்னண மூவகை யெனவிசைப் பாரரோ. (6)

### பதவுரை.

| | |
|---|---|
| सात्वीच | சத்துவ குணமாயை |
| रुद्रे | உருத்திர பரமேசுரனிடத்திலிருப்பதாம். |
| राजसी | இராசோகுண மாயை |
| भक्ते | பக்தனாகிய |
| ब्रह्मणि | பிரமனிடத்தி லிருப்பதாம். |
| तामसी | தமோ குணமாயை |
| दैत्यपक्षेतु | அசுரர்களிடத்தி லிருப்பதாம். |
| प्रोक्ता | மேற் கூறிய |
| सा माया | அம் மாயை |
| त्रेधा | (இவ்வாறு) மூவகையாக, |
| ह्युदाहृता | கூறப்படுகின்றது. எ-று. |

### பொழிப்புரை.

கற்பூர நிறத்தனாகிய உருத்திர பரமேசுரனிடத்தி லிருப்பது சத்துவகுண மாயை யெனவும், பதினெட்

டெழுத்துக்களை வழிபட்டுப் படைக்கு மாற்றலைப் பெற்றுக் கொண்ட அன்பனாகிய பிரமனிடத்தி லிருப்பது இரஜோ குண மாயை யெனவும், அசுரர்களிடத்தி லிருப்பது தமோ குண மாயை யெனவும் விஷ்ணுவின் மாயையானது முத் திறப்படும். மற்றும், தேவர்களிடத்தில் சத்துவ குண மாயையும், மக்களிடத்தில் இரஜோ குண மாயையும் இருக் கின்றன என்பாரு முளர்.

ஈண்டு, இரஜோ குண, தமோ குண காரியங்களை யழித்த லின் உருத்திரனுடைய மாயை சத்துவ மென்றும், படைக் குந் தொழிலைச் செய்தலின் பிரமனுடைய மாயை இரஜோ குண மென்றும், உயிர்களைத் துன்புறுத்துகின்றதால் அசுரர் களின் மாயை தமோ குண மென்றுங் கூறப்பட்டமை காண்க.

## மந்திரம் 7.

अजय्या वैष्णवीमायाप्यजेन सा जिता पुरा ।
देवकी * ब्रह्म विद्या सा या देवै रुपगीयते ॥ ७ ॥

உறைவிட மாயைக்கிங் குலகங் காப்பவன்
அறைதரு மீதுவென் றிடுதற் காகுமோ
சிறைபடு வேதனுஞ் செயித்தி டானதைத்
திறைகொளுந் தேவர்கொ ளுணர்வு தேவகி. (6)

பதவுரை.

| | |
|---|---|
| सा | அத்தகைய |
| वैष्णवि | விஷ்ணுவின் மாயையானது |

---

* ब्रह्म पुत्र, என்பது பாடபேதம்.

| | |
|---|---|
| अजय्या | வெல்லமுடியாததாம் |
| अजेन अपि | பிரமனாலும் |
| पुरा | முன்னர் |
| अजिता | வெல்லப்படாததாயிற்று. |
| देवैः | தேவர்களால் |
| यपगीयते | எது மிகப் போற்றப்படுகின்றதோ, |
| सा | அப் பிரமவித்தையே |
| देवकी | தேவகியாவள். எ-று. |

பொழிப்புரை.

விஷ்ணுவின் மாயையானது, பிரமன் முதலிய அனைவராலும் வெல்லுதற் கரிதாம், தேவர்களால் பெரிதுந் துதிக்கப்படுகின்ற பிரமவித்தையே தேவகியாய் அவதரித்தது. ஈண்டு, 'விஷ்ணுவின் மாயை' என்றதால் விஷ்ணுவே மாயையின் உறைவிடம் ஆவர் என்பது பெற்றும். இதுபற்றியே, "வைஷ்ணவீ சத்தி: அனந்தவீர்யா விஸ்வஸ்ய பீஜம்" என்று சுருதியுங் கூறுகின்றது. பிரம ஞானத்தினின்று பரப்பிரமராகிய கிருஷ்ணர் வெளிப்படத் தக்காராதலின் பிரமவித்தை தேவகி யெனப்பட்டது.

குறிப்பு :—பொய்யாகிய மாயை, விஷ்ணுவின் உண்மை வடிவின் அஞ்ஞானத்தாற் றோன்றியதாமாதலின் பிரமஞான மொழிந்த ஏனைய மந்திர செப முதலியவைகளால் வெல்லுதற்கரிதாம் என்பது கருத்து. 'பிரம புத்திர' என்னும் பாடத்தைக் கொள்ளில் பிரமனிடத் தெழுந்த பிரணவ வித்தை யெனக் கொள்க என்பர் சிலர். (7)

## மந்திரம் 8.

**निगमो वसुदेवो यो वेदार्थः कृष्णरामयोः ।**
**स्तुवन्ति सततं यन्मे सोऽवतीर्णो महीतले ॥ ८ ॥**

### வேறு.

*அருமறைகள் வசுதேவ ரம்மறையி னுட்பொருளா யமர்ந்து நிற்போர்*
*கருவடிவன் பலராமன் கருதருபன் மறைகண்மிகக் கருத்துட் கொண்டு*
*பெருமையுற வினிதேற்றும் பெருந்தகையப் பிரமமெனும் பெயரைப் பெ*
*ஒருவரியிங் குலகூடு வுருவொடுபெல் லுயிர்க்கருள வுலவிற் றம்மா. [ற்ற*

### பதவுரை.

| | |
|---|---|
| यः | எவர் |
| वसुदेवः | வசுதேவ ரெனப்படுபவரோ, அவரே |
| निगमः | வேதமாவர். |
| यः | எது |
| वेदार्थः | வேதத்தி னுட்பொருளோ, அது |
| कृष्णरामयोः | கண்ணனையும் பலராமனையும் மேற்கொண்டதாம். |
| मे | யான் என்பதன் விஷயமாகிய |
| यत् | யாதொரு விஷ்ணுவின் தத்துவத்தை |
| स्तुवन्ति | (மறைகள்) துதிக்கின்றனவோ, |
| सः | அப் பெரும் பொருளே |
| महीतले | மண்ணுலகில் |
| अवतीर्णः | கண்ணபிரானாய் அவதரித்தது. எ-று. |

### பொழிப்புரை.

வேதங்களே வசுதேவராய் அவதரித்தன. பலராமரும் கிருஷ்ணரும் அவ் வேதங்களின் பொருளாவார்கள். நான் என்

பதன் இலக்கியப் பொருளாயுள்ள விஷ்ணுமூர்த்தி யென்னும் நிறைந்த பரம்பொருளே மண்ணுலகில் கண்ணபிரானாய் அவதரித்தருளியது என்பதாம்.

ஈண்டு, பிரமவித்தை மறைகளால் வளர்க்கப்படுகின்ற தாமாதலின் அத்தகைய மறைகளே வசுதேவராய் அவதரித்து வந்தன. மற்றும் சுருதிகளாற் கூறப்பட்ட பொருள், வாக்கு மனங் கடந்த ஒரு பெரும் பொருளா மாயினும் இராமருங் கண்ணரும் உண்மையில் அத்தகையர்களே யாவர்கள், ஆதலின் அதற்கு முரணில்லை யென்பதுணர்க. இப்பொருளை விளக்குதற்கே 'மறைகள் துதிக்கின்ற' எனப்பட்டது. இதனால் நிறை பரம்பொருளாகிய விஷ்ணுமூர்த்தியே கண்ணபிரானாய் அவதரித்தருளினர் என்பது கொள்ளக் கிடந்தமை காண்க.

குறிப்பு:—பலராமரையும் கிருஷ்ணரையும் மேற்கொண்டது என்பதும்—தத்பத, துவம் பதங்களின் அபேதப் பொருளாகிய அத்துவிதீயப் பொருளா மென்பர் சிலர். (8)

## மந்திரம் 9.

**वने वृन्दा वने क्रीडन् गोप गोपी सुरैः सह ।**
**गोप्यो गाव ऋचस्तस्य यष्टिका कमलासनः ॥ ९ ॥**

மண்ணுலகிற் பசுக்களெனு மற்றுமுள வாயரெனும் வானரோடு
கண்ணனெனப் பெயர்புனைந்து கண்குளிர யாங்காணக் கார்நிறத்தோன்
பண்ணுந்திரு விளையாடல் பன்னுதற்கு மரிதாகும் பசுக்க ளாயர்
அண்ணல்மறை மந்திரங்க ளம்புயத்த னங்கையின்கோ லானு னன்றே.

## பதவுரை.

| | |
|---|---|
| गोपगोपी सुरैः सह | ஆயர் குல புத்திரர், புத்திரிமார்களென்னும் அமரர்களுடனும், அமர மாதர்களுடனும், |
| वने | மற்றைய வனத்திலும், |
| वृन्दावने | விருந்தா வனத்திலும், |
| क्रीडन् | கண்ணபிரான் திருவிளையாடல் செய்கின்றார். |
| गोप्यः | ஆயர் குல மடந்தையர்களும், |
| गावः | ஆனினங்களும், |
| तस्य | அவ்விஷ்ணுவைக் கூறுகின்ற |
| ऋचः | வடமொழி வேதப்பதிகங்களேயாகும். |
| यष्टिका | கண்ணபிரான் திருக்கரத்திலுள்ள பிரம்பு |
| कमलासनः | பிரமனுவன். எ-று. |

## பொழிப்புரை.

விஷ்ணு கண்ணனு யவதரித்து; ஆயர் குலப் புருடர்கள், மாதர்கள் என்னும் தேவர்களோடும், தேவ மாதர்களோடும் விளையாடுகின்றனர். ஈண்டு, மூடர்களான ஆயர் குல மக்களுடனும், ஆனினங்களுடனும் விளையாடல் கண்ணபிரானுக்குத் தகுமோவெனின்? அன்றன்று, ஆயர்களும், கோக்களும் வேதத்தின் மந்திரங்களே யாவார்கள் ஆதலின் கூடும் என்க. பிரமனைக் கொண்டு உலகமாகிய ஒரு மனையின்கண் செய்யவேண்டியவற்றை விஷ்ணுவானவர் செய்து வருகின்றாராதலின், பிரமனை, கையிலுள்ள ஒரு பிரம்பாய்க் கூறப்பட்டது என்பதாம்.

குறிப்பு:— ஈண்டுப் 'பிரம்மை மாடுகள் மேய்க்கும் ஒரு கோலெனவுங் கொள்ளலாம்' என்பர் சிலர். (9)

## மந்திரம் 10.

**वंशस्तु भगवान् रुद्रः श्रृङ्गमिन्द्रः सखा सुराः ।**
**गोकुलं वनवैकुण्ठं तापसास्तत्र ते द्रुमाः ॥ १० ॥**

ஓசைதருங் கழையதுவா யுருத்திரனே யுதித்தனன்மற் றும்பர் கோமான்
பேசுமிவண் கொம்பாவன் பெருநட்பார் பிறங்கமரர் பின்னர் வாராத்
தேசுதரு வைகுண்டந் திகழ்தருகோ குலமாகுந் திருமா லாடுந்
தூசில்வனத் தருக்களே தூரிசறுமா தவர்களாய்த் தோன்றி னரால். (10)

பதவுரை.

| | |
|---|---|
| वंशस्तु | வேணுவோ |
| भगवान् | எல்லாம் வல்ல |
| रुद्रः | உருத்திர பரமேசுரனே யாவன். |
| श्रृङ्ग | கொம்பு |
| इन्द्रः | இந்திரனாவன். |
| सखा | நண்பர்கள் |
| सुराः | தேவர்களே யாவார்கள். |
| गोगुल वनं | கோகுலவனமோ, |
| वैकुण्ठः | வைகுண்டமேயாகும். |
| तत्र द्रुमाः | அங்குள்ள தருக்கள் |
| ते | கீர்த்தி படைத்த |
| तापसाः | மாதவர்களே யாவர்கள். எ-று. |

பொழிப்புரை.

கண்ணபிரானுடைய புல்லாங் குழலாக உருத்திர பரமேசுரனே யவதரித்தனன். இவருடைய அன்பர்களாகத் தேவர்களே வந்துள்ளார். கோகுலமென்னும் ஆயர் கிராமம், வைகுண்டமேயாயிற்று. அங்குள்ள தருக்கள் மாதவர்களே யாவர் என்பதாம்.

கலைகளனைத்தையு முற்றுமுணர்ந்தவ னாதலின் பரமே சுரன் கழையாகவும், விஷ்ணு மூர்த்தியின் பாங்கருள்ளார்கள் தேவர்களாவார்கள் ஆதலின் கண்ணபிரானுடைய மருங்கி லுள்ளவர்களாக அமரர்களே இங்ஙன் தோன்றினார்களென்ப தும், ஆதி பகவன் வாழ்தலின் கோகுலமே வைகுண்டமென் பதும், அங்கு வசித்தற்குரியார்கள் பெருந்தவ முடையார் களே யாதலின் மரங்களாகத் தோன்றியவர்கள் நாரதர் முத லிய மகரிஷிகளேயாவர் என்பதும் உணரற்பாலனவாம்.

குறிப்பு :—ஈண்டு, 'கொம்பு' என்பது' இந்திரன், ஊது கொம்பாகிக் கண்ணபிரான் திருக்கரத்திலுள்ளான்' என்பர் சிலர். 'வேணுவின் நுனியாக இந்திரன் றோன்றி னன்' என்பர் மற்றொருவர்.

## மந்திரம் 11.

**लोभक्रोधादयो दैत्याः कलिः कालोऽतिरस्कृतः ।**
**गोपरूपो हरिः साक्षान् मायाविग्रह धारणः ॥ ११ ॥**

வேறு.

தீர்வரும் லோப மாதி தீயபல் குணங்க ளோடு
சேர்கலி போல வாகுஞ் சீறுவல் லரக்க ராவர்
சோர்வுறு மாய மாகித் தோற்றினன் விமலை யாலே
நேர்தர மேனி யேற்கு நீலநன் னிறத்த னேயோ. (11)

## பதவுரை.

| | |
|---|---|
| कलि कालः | கலிகாலம் போன்றவர்களும் |
| अतिरस्कृतः | தீய குணங் கொண்டெழுகின்றவர்களு மான |
| दैत्याः | அரக்கர்கள் |
| लोभक्रोधाद्यः | உலோபம், கோபம் முதலியவைகளே யாவார்கள். |
| माया विग्रह धारणः | மாயா வடிவைக் கொள்கின்றவராகிய |
| हरिः | விஷ்ணுமூர்த்தியே |
| साक्षात् | நேரே |
| गोपरूपः | ஆயர்குல மக்களாவார் என்றவாறு. |

## பொழிப்புரை.

கலிகாலம் போன்று, தீயகுணங்களால் தோன்றுகின்றவர்களான அரக்கர்கள், உலோபம், கோபம் முதலிய குணங்களே யாவார்கள். மாயையால் பல்வகைத் திருமேனிகளைக் கொள்கின்ற விஷ்ணுபகவானே நேரே இடையர்களாய்த் தோன்றி யருளினர். பரமான்ம வடிவரேயாகிய கண்ணபிரான் வெளிப்படில் (சாட்சாத்காரமாகில்) காமம், லோபம், கோப முதலியவைகள் அடியோடொழிதலின், ஈண்டு அவைகள் அசுரர்களாக உவமிக்கப்பட்டன. உண்மையில் கண்ணபிரான் நிர்க்குணப் பிரமமேயாவன் என்றுணர்க என்பதாம்.

குறிப்பு:—மூலத்தில் "திரஸ்க்ருத:" எனப் பிரித்துப் 'பகவானைத் தரிசித்தல், நினைத்தல் மாத்திரத்தானே, உலோப முதலிய தீய குணங்களை வளர்க்கின்ற கலிகாலமானது வெல்லப்படும்' என்பாருமுளர். (11)

## மந்திரம் 12.

दुर्बोधं कुहकं तस्य मायया मोहितं जगत् ।
दुर्जया सा सुरैः सर्वैः यष्टिरूपोऽभवद्विधिः ॥ १२ ॥

அரிதனின் மாயை யார்க்கு மறிவரி தாகு மன்றித்
தெரியுல கிதனைச் சேர்ந்து தியங்கியு மோகங் கொள்ளும்
விரிகலை வான ராலு வெல்லுத லாகா தித்தால்
கரியெனும் வேதன் றானுங் காத்துறு கோலாய் வந்தான். (12)

### பதவுரை.

| | |
|---|---|
| तस्य | அவ் விஷ்ணுவின் |
| कुहकं | வஞ்சக மாயையானது |
| दुर्बोधं | அறிதற்கரிதாம் |
| मायया | (அத்தகைய) மாயையால் |
| जगत् | உலகமானது |
| मोहितं | மயக்க முற்றது. |
| सर्वैः सुरैः | தேவர்களனைவராலும் |
| सा | அம் மாயை |
| दुर्जया | வெல்லுதற் கரியதாம். |
| विधिः | (இதனால்) பிரமனும் |
| यष्टिरूपः | கோல் வடிவாய் |
| अभवत् | ஆயினன், எ-று. |

### பொழிப்புரை.

விஷ்ணு பகவானுடைய எல்லாம் வல்ல மாயையானது தேவர்களாலும் வெல்ல முடியாததாம். அற்றாகலினன்றே,

பிரம தேவனும், இக் கண்ணபிரானுக்கு, மாடு மேய்ப்பதற் குரியதும், கையிலுள்ளதுமாகிய ஒரு தடியாயினனென்க. வைணவர்கள் விஷ்ணுவின் வடிவங்களை இவைகள் உண்மை களே யென்று கொள்ளுகின்றனர். ஆதலின் அவற்றை மாயை வடிவங்க ளென்பதென்னை எனின்? அம் மாயை செய்யத்தகாததையுஞ் செய்ய வல்லதாமாதலின் அதுவும் பொருந்து மென்றுணர்க.

குறிப்பு:—"எவருடைய அஞ்ஞானத்தால் அதாவது எவரை யறியாததால், அதன் காரியமாகிய இவ் வுலகம் அவ ரினும் வேறென்று மயங்கப்பட்டதோ, அவ் விஷ்ணுவின் மாயை எல்லாம் வல்லதாமாதலின் அறிதற்கரிது" என்பர் சிலர். சந்திரன் தைரியமாயினன் என்பது பாடபேதம்.

## மந்திரம் 13.

**रुद्रो येन कृतो वंशस्तस्य माया जगत्कथम् ।**
**बलं ज्ञानं सुराणां वै तेषां ज्ञानं हृतं क्षणात् ॥ १३ ॥**

அரனையுங் கழைய தாக வாக்கின னென்று லன்னோன்
விரவுமம் மாயை தன்னை வீக்குல கெங்கன் வெல்லும்
சுரர்களுக் குறுதி ஞானந் தோன்றவர் வன்மை யென்னும்
உரமதைக் கணத்தி லீர்த்தா னேங்குல குண்ட பெம்மான்.

### பதவுரை.

रुद्रः — உருத்திர பரமேசுரன்
येन — எவ் விஷ்ணுவால்

| | |
|---|---|
| वंशः | புல்லாங் குழலாக, |
| कृतः | செய்யப்பட்டனனே, |
| तस्य | அவ் விஷ்ணுவின் |
| माया | மாயையானது |
| जगत् | உலகத்தால் |
| कथं ? | எவ்வாறு வெல்லப்படும்? |
| सुराणां | தேவர்கட்கு |
| ज्ञानं वै | ஞானமே |
| बलं | வன்மையாம். |
| तेषां | அத் தேவர்களின் |
| ज्ञानं | (அத்தகைய) ஞானமானது |
| क्षणात् | ஒரு கணப்போதில் |
| हृतं | விஷ்ணுவால், கவர்ந்து கொள்ளப்பட்டது என்றவாறு. |

## பொழிப்புரை.

உருத்திர பரமேசுரனை வேணுவாகச் செய்த அத்தகைய விஷ்ணுவின் மாயை உல்கத்தால் வெல்லமுடியுமோ, முடியாதாம்; ஏனெனின்? ஞானமாகிய பேராற்றலை யுடைய தேவர்களின் உணர்வும் ஒரு மாத்திரைப் போதில் விஷ்ணுவால் கவரப்பட்டதாலென்க. அதாவது உருத்திரன் முதலிய தேவர்களை, வேணு, கைக்கோல் முதலியனவாகச் செய்து கொண்டதால் என்பதாம்.

குறிப்பு:—" பகவான் நம் மாயையால் உருத்திரனையும் வேணுவாகச் செய்து கொண்டாரோ, அம்மாயையும், அதன்

காரியமாகிய உலகமும் மாயையின் சம்பந்தமற்ற விஷ்ணு வாகிய பரப்பிரமத்தை எவ்வாறு மறைக்கும்?" என்று பொருள் கொள்வாருமுளர். (13)

## மந்திரம் 14.

**शेषनागोऽभवद्रामः कृष्णो ब्रह्मैव शाश्वतम् ।**
**अष्टावष्ट सहस्रे द्वे शताधिकाः स्त्रियस्तथा ॥ १४ ॥**

இப்புவியைச் சுமக்கின்ற சேடனே யிராமனு யெழுந்தான் மற்றும்
அப்பதனின் வடிவமுள வாதியே கண்ணனு யவனி வந்தான்
ஒப்பதறு மிரண்டெட்டு வாயிரத்தோ டொருநூற்று வெட்டு மாகிச்
செப்பலுறு மிடையர்குல மாதர்களை யின்னவரென் றியம்பக் கேண்மோ.

### பதவுரை.

| | |
|---|---|
| शेषनागः | ஆதிசேடனே |
| रामः | பலராமனுய் |
| अभवत् | உதித்தனன். |
| शाश्वतं | நித்தியமாகிய |
| ब्रह्मैव | பிரமமே |
| कृष्णः | கண்ணனெனத் தோன்றியது |
| तथा | அவ்வாறே |
| द्वे अष्टसहस्रे | பதினாறுயிரத்து |
| शताधिकाः | நூற்று |
| अष्टौ | எட்டு |
| स्त्रियः | ஆயர் குலமாதர்களும் (இன்னாரென மேற் கூறுவாம்.) |

பொழிப்புரை.

சேஷபகவானே பலராமராகவும், பரப்பிரமமே கண்ண பிரானாகவுந் தோன்றினர். இவ்வாறே பதினாறாயிரத்து நூற்றெட்டு ஆயர் குல மாதர்கள், அதாவது நரகாசுரனுடைய வீட்டிலிருந்து கொண்டு வரப்பட்டவர்கள், யாவரெனின்? மேற் கூறப்படுகின்றது. இவ்விரண்டு சுலோகமுங் குளகம். இதனால் பலராமருக்கும், கண்ணபிரானுக்கும் பழமை வடிவங்கள் இன்னவை யெனப்பட்டன வென்றுணர்க. (14)

## மந்திரம் 15.

**ऋचोपनिषदस्तावै ब्रह्मरूपा ऋचः स्त्रीयः ।**
**द्वेषश्चाणूर मल्लोऽयं मत्सरोमुष्टिकोऽजयः ॥ १५ ॥**

வேறு.

ஆழிவளர் கரத்தானை யறைகின்ற வருமறையின் முடிகண் மற்றும்
எழிசைகொள் மறையோத்தா மிடையர்குல மடந்தையர்க ளென்று கூறுந்
தோழியர்கள் சாணூர மல்லனவன் றுகள்வெறுப்புத் தொடர் பொறாமை
ஊழியிலும் வெலற்கரிய முட்டிகனு யுருவெடுத்தே யுலாவிற் றம்மா.

பதவுரை.

| | |
|---|---|
| ता स्त्रीयः | அம் மாதர்கள் |
| ऋचोपनिषदः वै | இருக்கை (இருக்கு வேத மந்திரங்களை) யுபலக்கணமாகக் கொண்ட உபநிடதங்களே யாவார்கள். |
| ब्रह्मरूपा | (மற்றும்) வேதமாகிய |
| ऋचः | இருக்குகளும் (பதிகங்களும்) அவர்களே யாவார்கள். |
| द्वेषः च | வெறுப்பே |

चाणूरमल्लः { சாணூரமல்லனென்னு அரக்கனு வன்.
अयं मत्सरः இப் பொறாமையே
अजयः வெல்லமுடியாத
मुष्टिकः { முட்டிகனெனும் அரக்கனும் வந்தனு எ-று.

பொழிப்புரை.

உண்மையில் கிருஷ்ண பரமான்மாவைக் கூறுகின்ற உபநிடத மந்திரங்களே மேற்கூறிய ஆயர்குலமாதர்களாய்த் தோன்றின. மற்றும் அவர்கள், வேதத்திலுள்ள இருக்கு களே (பதிகங்களே) யாவார்கள். உபநிடதங்கள் கிருஷ்ண பரமான்மாவின் உண்மைத் தத்துவத்தை யெடுத்துக் கூறுத லானும், மறைந்த பொருளுடைமையானும், அத்தகைய ஆயர்குல மாதர்களா யுதித்தன வென்பதுணர்க. 'கண்ணபிரா னுக்கு மனைவியர்கள் இத்துணையார்களே யென்று' விஷ்ணு புராணமுங் கூறுகின்றது என்பதுணர்க. அதாவது நான் மறைகளில் தொகுத்துள்ள மந்திரங்களும், உபநிடதங் களுமே ஆயர்குலப் பெண்களாய்த் தோன்றின என்பதாம்.

மந்திரம் 16.

दर्पः कुवलयापीडो गर्वो रक्षः खगो बकः ।
दया सा रोहिणी माता सत्यभामाऽहिंसेति वै ॥ १६ ॥

பேசுகின்ற வகமதுமப் பெருங்குவல யாபீடப் போரார் தந்தி.
பாசுபடர் வெளியுலவும் பகனென்னு மரக்கனும் பாசச் சீற்றம்
ஊசலறு தயையென்ப துரோகணியா யுதித்ததரு ளுருவு தானும்
ஆசகலுஞ் சத்தியநல் வாமனென வவதரித்த தணியாய் மண்ணில்.

பதவுரை.

| | |
|---|---|
| दर्पः | ஆணவமென்பதே |
| कुवलया पीडः | குவலயாபீடம் என்னும் யானையாம். |
| गर्वः | செருக்கே, |
| खगः | வானில் திரிகின்ற |
| बकः | பகன் என்னும் |
| रक्षः | அசுரனாகும். |
| सा रोहिणि | அவ் வுரோகிணியென்னும் |
| माता | அன்னையார் |
| दया | தயையேயாவர் |
| सत्यभामा | சத்திய வாமா என்பவர் |
| अहिंसा | கொல்லாமையே யாவர் |
| इति वै | என்று சொல்லப்படுகின்றது, எ-று. |



பொழிப்புரை.

செருக்கானது குவலயாபீட மென்னும் யானையாகவும், ஆணவம் ஆகாயத்தி லுலாவுகின்ற பகனென்னும் அரக்கனாகவும், தயையே மாதாவாகிய உரோகிணி யென்பவளாகவும், கொல்லாமை சத்தியவாமாவாகவுந் தோன்றின. ஈண்டு, 'குவலயாபீடம்' என்பதால் உலகிற்குத் துன்பு விளைப்போன், அல்லது கமல மலரை மிதித்தவன் என்பது கொள்ளக்கிடந்தது காண்க. இதனால் இவன் முற்பிறப்பில் 'ரிஷ்டன்' என்னும் அரக்கன் என்பது பொருளாயிற்று. மிகுந்த தயையுடையவளாதலின் உரோகிணியைத் தயை யென்றும், கொல்லாமை என்பதால் பொறுமையை மேற்கொண்ட பூமி யென்றும் கொள்ளப்பட்டமை காண்க. சத்தியவாமாவானவர் பொறுமை வடிவரே யாதலின் இது பொருத்த முடைமையுங் காண்க என்பதாம்.

## மந்திரம் 17.

**अघासुरो महाव्याधिः कलिः कंसः स भूपतिः ।**
**शमोमित्रं सुदामा यः सत्याऽक्रूरो दमोद्धवः ॥ १७ ॥**

*பெரும்பிணியு மகாசுரனைப் பெயர்கொண்டு பிறந்ததெனப் பேச லாகும்*
*வருங்கலியுங் கம்சனென வழங்குகின்ற வலியபகை மாம னானன்*
*அரும்பிரியக் குசேலரவர் புலனடக்க லகத்தைவெல்ல லென்று கூறத்*
*தருந்தமநல் லுத்தவராஞ் சத்தியமக் குரூரெனக் சாற்ற லாமே*

### பதவுரை.

| | |
|---|---|
| महा | பெரும்வியாதியே |
| अघासुरः | அகனென்னும் அசுரனவன். |
| सः | கீர்த்திமலிந்த |
| कंस भूपतिः | 'கம்சன்' என்னும் அரசன் |
| कलिः | கலிகால வடிவனவன் |
| मित्रं | நட்பு மிகுந்த |
| सुदामा | குசேலர் |
| शमः | புலனடக்கல் வடிவமேயாவர். |
| सत्यं | சத்தியமே |
| अक्रूरः | அக்குரூரர் வடிவமாகும். |
| दमः | மனமடக்கலே |
| उद्धवः | உத்தவராகும். |

### பொழிப்புரை.

பெரும் வியாதியானது, அகன், என்னும் அசுரனாகவும்; கலிகாலம் கஞ்சனாகவும்; புலனடக்கலே குசேலராகவும்;

உண்மையே அக்குரூர ராகவும்; மனமடங்கல் உத்தவ ராகவுந் தோன்றின. ஈண்டுப் பெருவியாதி யென்பதால் பிணிகளுக் குள் இராசாவாகிய காசநோய் கொள்ளற் பாலதாம். கலி காலம் என்பதால் காலச் சுற்றாகிய கலகங் கொள்ளற் பால தாம். ஏனெனின்? கலியுகாவதாரன் துரியோதனனு தலி னென்க. அகன் என்பவன் அரவ வடிவுடையவன் என்ப துணர்க. (17)

## மந்திரம் 18.

यः शङ्खः स स्वयं विष्णुर्लक्ष्मीरूपो व्यवस्थितः ।
दुग्धसिन्धोः समुत्पन्नो मेघघोषस्तु स स्मृतः ॥ १८ ॥

திருமாலாஞ் சங்கமது செல்வியெனத் திகழ்ந்ததுபின் றெளிந்தபாலின்
பெருமாழி யிற்பிறந்த பெற்றியது பினுமதுவின் பிறங்கு கின்ற
கருமாலி னொலியெனவுங் கற்றவர்கள் கழறுவர்கள் கருதி லிஃது
முருகோனை மருகனென முத்தமிழ முகுந்தனென மொழிய லாமால்

### பதவுரை.

| | |
|---|---|
| यः | யாதொரு |
| शङ्खः | சங்கானது |
| स्वयं विष्णुः | நேரேவிஷ்ணு வடிவமாமோ, |
| सः | அச் சங்கு |
| लक्ष्मीरूपः | இலக்குமியாய் |
| व्यवस्थितः | இனிதமைந்துள்ளது. |
| सः | மற்றும், அச் சங்கு |
| दुग्धसिन्धोः | பாற்கடலினின்று |

| | |
|---|---|
| समुत्पन्नः | இனிது தோன்றியதென்றும் |
| मेघघोषस्तु | மேக முழக்கமென்றும் |
| स्मृतः | வழங்கப்படுவதாகும். |

பொழிப்புரை.

விஷ்ணு மூர்த்தியின் வடிவமென்னுஞ் சங்காக இலக்குமியே யவதரித்தனள். இச் சங்கு பாற்கடலிற் பிறந்ததாம். மற்றும், இது மேகவொலியென்று வழங்கப்படுகின்றதுமாம். ஈண்டுச் சங்கு பாற்கடலிற் பிறந்த தென்பதால் இலக்குமி வடிவாய் வந்தற்குக் காரணங் கூறியவாறாயிற்று. மேக ஒலியென்பதால் விஷ்ணுவின் வடிவமே யென்பதற்குக் காரணங் கூறிய வாறாயிற்று. இதனால் பஞ்சசனன் என்ற அசுரனால் தோன்றிய பாஞ்சசன்னியமென்னுஞ் சங்கைத் தாங்கியதற்கு முன்னரும் விஷ்ணு மூர்த்தியின் திருக்கரத்தில் இத்தகைய சங்கு விளங்கிய தென்பது ஈண்டு உணரற்பாலது. இதனால் சங்கு இலக்குமியின் சகோதரியா மென்பதுங் காண்க.

## மந்திரம் 19.

**दुग्धोदधिः कृतस्तेन भग्नभाण्डो दधिगृहे ।**
**क्रीडते बालको भूत्वा पूर्ववच्च महोदधौ ॥ १९ ॥**

வேறு.

கண்ணன்முன் பால்தயிர் கவர்ந்தகக் களிப்புடன்
உண்ணிடு போதவ னுடைந்தவிழ் சட்டியும்
மண்ணதி லூறிய மறிதிரைச் சிந்தெனப்
பண்ணியு மாடினன் பரிசில்முன் மைந்தனாய்

பதவுரை.

| | |
|---|---|
| दधिगृहे | ஆயர்மனையில் |
| भग्न भाण्डः | உடைந்த சட்டியிலிருந்து சிந்திய பாலானது, |
| तेन | கண்ணபிரானால் |
| दुग्धोदधिः | பாற்கடலாக, |
| कृतः | செய்யப்பட்டது. |
| महोदधौ | பாற்கடலில் |
| पूर्ववच्च | முன்னர் விளையாடியது போல் |
| बालको भूत्वा | குழந்தையாகி |
| क्रीडते | இப்போதும் விளையாடுகின்றார். |

பொழிப்புரை.

விஷ்ணு, படைப்பிற்கு முன்னர் பாற்கடலில் ஆலிலையின் மீது துயின்றது போன்று இப்போது கண்ணபிரா னென்னும் குழந்தைவடிவாய், திருடுங்காலுடைந்த பாற்பானையிலிருந்து சிந்திய பால்தயிரையே பாற்கடலாகக் கொண்டு ஆயர்குல மாதர் வீட்டில் விளையாடுகின்றனர். சுவேதத்து விபத்தை யழகுறுமாறு செய்கின்ற கடலிலும், பாற்கடலிலும் விளையாடுகின்றனர் என்பதாம். (19)

## மந்திரம் 20.

**यस्यासौ ज्वलनाभासः खड्गरूपो महेश्वरः ।**
**कश्यपो लूखलः ख्यातो रज्जुर्मातादिस्तथा ॥ २० ॥**

மட்டறு கனலொளி மலிதரு கடகம
தட்டமங் கலமுள வரனவ னரிதனைக்
கட்டுர லிரணிய கசிபனக் கயிறது
உட்டெளி யதிதியி னுருவென வுரைப்பால் (20)

## பதவுரை.

| | |
|---|---|
| ज्वलनाभासः | கனல் போன்ற |
| यस्य | யாதொரு கதை யுண்டோ, |
| असौ खड्गरूपः | இக்கத்தி வடிவெடுத்தவர் |
| महेश्वरः | உருத்திர பரமேசுரராவர். |
| कश्यपः | கசியபன் |
| उलूखलः | உரலாவன் |
| ख्यातः | என வழங்கப்படுகின்றது. |
| तथा | அங்ஙனமே |
| रज्जुः | கண்ணபிரானைக் கட்டிய கயிறானது |
| अदितिः | அதிதி யென்னும் |
| माता | மாதா ஆவள், எ-று. |

## பொழிப்புரை.

தீயைப் போன்று ஒளிமலிந்த நந்தகம் என்னும் வாளானது பதினொரு வுருத்திரர்களே யாவர். கசியபரின் பிதாவே உரல் வடிவாயினர். அதிதிமாதாவென்பவள் கண்ணபிரானைக் கட்டிய கயிறுவள். ஈண்டுப் பரமேசுரன் ஒருவனே கோர வடிவால் வாளாகவும், சாந்த ரூபத்தால் புல்லாங்குழலாகவும் அவதரித்தனன் என்பதும், கசியபன் என்பதால் அவனுடைய தந்தை கொள்ளற்பாலார் என்பதும், அதிதி மாதாவை யொழிந்த கயிறுகளால் கண்ணபிரான் கட்டுப் படார் என்பதும் உணரற்பாலன. மற்றும், அதிதியே கயிறானதால் இழுக்குங்கால் மரமானது முறிந்துபோனவிடத்தும் கயிறு அறாததாயிற்றென்பது முணர்க என்பதாம். (20)

## மந்திரம் 21.

**संहारार्थं च शत्रूणां रक्षणाय च संस्थितः ।**
**कृपार्थे सर्वभूतानां गोप्तारं धर्ममात्मजम् ॥ २१ ॥**

*குந்தகப் பகைவரைக் கொல்லவும் அறமதை*
*உந்தவு மிவணுள வுயிர்களுக் கருளவும்*
*நந்தனின் மகனென நடித்திவ ணிலப்பொதுத்*
*தந்தையை யளித்தவன் றனதறம் தழுவுவான்.* (21)

### பதவுரை.

| | |
|---|---|
| शत्रूणां | பகைவர்களை |
| संहारार्थं च | கொல்லவும் |
| (धर्मसेतून्) | (நற்றருமங்களை) |
| रक्षणाय च | பாதுகாக்கவும் |
| संस्थितः | பகவான் மனித வடிவமாய் எழுந்தருளியிருக்கின்றனர். |
| सर्वभूतानां | (மற்றும்) உயிர்களனைத்திற்கும் |
| कृपार्थे | அநுக்கிரகஞ் செய்தற் பொருட்டு, |
| गोप्तारं | பாதுகாப்பதும் |
| आत्मजं | தம்மாலுண்டாக்கப் பெற்றதுமாகிய |
| धर्मं | தருமத்தைக் அவர் கைக்கொண்டருளினார், எ-று. |

### பொழிப்புரை.

*கண்ணபிரான், சத்துருக்களை யழிக்கவும், மித்துருக் கட்கு அநுக்கிரகிக்கவும், மற்றும், உயிர்க ளனைத்திற்கும்*

அருளுதற் பொருட்டும், அனைத்தையும் பாதுகாப்பதும், தம்மால் உண்டாக்கப்பட்டதுமாகிய தருமத்தில் நிலையுடையவராயிருக்கின்றார் என்பதாம்.

ஈண்டு, கண்ணபிரான் திருவவதாரத்தின் பயன் கூறப்படுகின்றது. நற்றருமங்களை யென்பது எஞ்சி நின்றது. சத்துருக்களைக் கொல்லுதலும் தம்மால் நிறுவிய தருமங்களைப் பரிபாலித்தற் பொருட்டே என்றுணர்த்துவான் தருமத்தில் நிலையுடையவர் எனப்பட்டது.

குறிப்பு :—"உலக சக்கரம் பிரம ரூபமேயாம்; காரணத்தைத் தவிர்த்துக் காரியத்திற்கு நிலைத்தற் றன்மை யின்மையின் என்பது கருத்து" என்பர் சிலர். (21)

## மந்திரம் 22.

यत्सृष्टमीश्वरेणासीच्चक्रं ब्रह्मरूपधृक् ।
वैजयन्ती च वायुश्च स परं धर्मसंज्ञकः ॥ २२ ॥

அலைகட றுயிலரிக் களித்திட அரன்செயும்
மலைவறு திகிரியும் மறையதென் றுரைப்பர்பல்
இலைவனத் தொடையது மியங்குறு மனிலமும்
கலையுணர்த் தறமெனக் கழறிடப் படுமரோ. (22)

பதவுரை.

| | |
|---|---|
| यत् चक्रं | யாதொரு சக்கரமானது |
| ईश्वरेण | பரமேசுரனால் |
| सृष्टं | செய்யப்பட்டு |

| | |
|---|---|
| आसीत् | விஷ்ணுவிற்கு அளித்தற் பொருட்டு விளங்கிக் கொண்டிருக்கின்றதோ, |
| स | அது |
| ब्रह्मरूपधृक् | வேதமே அவதரித்து வந்ததாகும். |
| वैजयन्ती च | வனமல்லிகை மாலையும், |
| वायुश्च | ஆவணித் திங்கள் அஷ்டமியில் உலவும் காற்றும் |
| परं | நேரே |
| धर्मसंज्ञकः | தருமமென்பவைகளேயாம், எ-று. |

## பொழிப்புரை.

பரமேசுரன் ஞான கலையால் தனது திருக்கண்ணிலிருந்து உண்டாக்கி, விஷ்ணுவுக்கு அளிக்க வேண்டுமென வைத்திருந்த சக்கரமானது வேதமேயாம். கண்ணபிரான் திருவவதாரஞ் செய்த நாளில் உலவிய காற்றும், காட்டு மல்லிகை மாலையும் தரும வடிவங்களே யாகின்றன என்பதாம்.

குறிப்பு:— ஈண்டு, அசைகின்ற தன்மையுடையனவாமாதலின் காட்டு மல்லிகை மாலையும், வாயுவும் தருமமெனப்பட்டன. அதுவும் தருமமானது வெற்றிக்குக் காரணமாயிருத்தலின் என்க. கண்ணபிரான் திருவவதாரஞ் செய்த, 'ஜயந்தி' என்னும் ஆவணி மாதத்தின் அட்டமியில் உலவிய காற்றானது 'வெண்சாமரமாகும்' என்பதும் பாடபேதம். அதாவது அந் நாளையே ஒரு நிமித்தமாகக் கொண்டு வாயுவானது கண்ணபிரானை வழிபட்டது என்பது கருத்து. அச்சாமரம் தரும வடிவமானதால், விசிறியால் வெப்பந் தீருமாறு அதருமத்தைப் போக்கித் தருமமாய் நின்று வழிபட்டது என்பது உட்கிடை.

குறிப்பு :—மற்றும், காற்று என்பதால் மாப்பிராணன் கொள்ளற்பாலதாம். ஏனெனின்? "பரமான்மாவாகிய மாப்பிராணன் காலத்தை நிமித்தமாகக்கொண்டு கண்ணபிரானாய் அவதரித்தருளினது." ஆதலின் என்பாருமுளர்.

## மந்திரம் 23.

**छत्रन्तु खंच संविद्धि विन्दुवत्सर्वमूर्धनि ।**
**यावन्ति देवरूपाणि वदन्ति विबुधा जनाः ॥ २३ ॥**

*எழுத்திடு புள்ளியி லெவற்றினு மேலதாய்*
*நிழற்குடை யம்பர நிகழ்வதென் றோருதி*
*பழுத்தருண் மெய்த்தவர் பணிந்துமுற் கூறிய*
*விழித்துணர் பண்புறு விபுதர்கள் யாவரும்.* (23)

### பதவுரை.

| | |
|---|---|
| विन्दुवत् | எழுத்துக்களின்மேல் நிற்கின்ற புள்ளியைப் போன்று |
| सर्व मूर्धनि | அனைத்தினுக்கு மேலாகிய |
| छत्रन्तु | குடையானது |
| खंच | விண் வடிவென்று |
| संविद्धि | உணர்வாயாக. |
| विबुधा जनाः | பேரறிவாளர்கள் |
| यावन्ति | எவ்வளவு |
| देवरूपाणि | தேவ வடிவர்கள் உள்ளவர்களென |
| वदन्ति | கூறுகின்றார்களோ, |
| (ते) | (அத் தேவர்களனைவரும்.) எ-று. |

பொழிப்புரை.

எழுத்துக்களின் மேல் புள்ளி (விந்து) இருப்பது போன்று மிகச் சிறந்ததா மாதலின் அனைவருக்கு மேலாயுள்ள ஆகாயமே குடையாக அவதரித்து வந்ததாகும் என்றுணர்வாயாக. மற்றும், வான்மீகி, வியாத முனிவர் முதலிய பெரியார்களின் நூல்களிற் கூறப்பட்டுள்ள முப்பத்து முக்கோடி தேவர்களும் என்பதாம். இச் சுலோகம் குளகம்.

## மந்திரம் 24.

नमन्ति देवरूपेभ्य एवमादि न संशयः ।
गदा च कालिका साक्षात् सर्वशत्रुनिबर्हिणि ॥ २४ ॥

இங்கருள் கண்ணனுக் கினியன செய்பவர்
அங்குள விண்ணவ ரனைவர்க ளென்பதிற்
சங்கையு முண்டுகொ றரியலர்க் கொன்றிடும்
அங்கையின் தண்டமு மருள்வலிச் சண்டியாம். (24)

பதவுரை.

| | |
|---|---|
| देवेभ्यः | மற்றும், அவர்கள், எத் தேவர்களை |
| नमन्ति | வணங்குகின்றார்களோ, (அவர்களனைவரும்) |
| एवमादि | நந்தகோபர் முதலியோர்களாய் இங்கு வந்து அவதரித்தவர்களேயாவார்கள். |
| न संशयः | இதில் ஐயமில்லை ; |
| सर्वशत्रु | பகைவர்களனைவரையும் |

| | |
|---|---|
| निवर्हिणी | கொல்லும் |
| कालिकाच | காளியே |
| गदा | கதையாய் (தண்டமாய்) அவதரித்த னள். எ-று. |

பொழிப்புரை.

மற்றும், வால்மீகி முதலியோர்களால் வணங்கப் பெற்ற வர்களுமான தேவர்களனைவருமே இங்கு நந்தகோபர் முத லியோர்களாக வந்து அவதரித்தவர்களாவார்கள். பகைவ ரைக் கொல்லும் காளியே, கண்ணபிரான் திருக்கரத்திலிருக் கின்ற 'கதை' என்னும் ஆயுதமாய் வந்தனள் என்பதாம்.

## மந்திரம் 25.

धनुः शार्ङ्गं स्वमाया तच्छरः कालोऽसु भोजनः ।
अब्जकाण्डं जगत् बीजं धृतं पाणौ स्वलीलया ॥ २५ ॥

சாற்றிடு சாரங்கத் தனுவவன் மாயையாம்
போற்றுபல் சீவரைப் புசித்திடு காலனே
ஏற்றிடு பாணமிவ் விறைவன தாடலால்
ஆற்றுகைத் தாமரை யகிலவித் தாகுமால். (25)

பதவுரை.

| | |
|---|---|
| शार्ङ्ग | 'சாரங்கம்' என்னும் |
| धनु | வில்லானது, |
| स्वमाया | விஷ்ணுவின் மாயையாகும். |
| असु भोजनः | உயிர்களை யுண்ணுகின்ற |
| कालः | எமன், |

| | |
|---|---|
| तत् | அவ் வில்லின் |
| शर: | பாணமாயினன். |
| स्वलीलया | தனது திருவிளையாட்டால் |
| पाणौ | திருக் கரத்தில் |
| धृतः | தாங்கியிருக்கின்ற |
| अब्जकाण्डं | சிறப்புற்ற கமல மலரானது |
| जगत् बीजं | உலகிற்கொரு வித்தாகும். எ-று. |

பொழிப்புரை.

விஷ்ணுவின் மாயையானது கண்ணபிரான் திருக்கரத்திலிருக்கின்ற 'சாரங்கம்' என்னும் வில்லாகவும், காலன் அதனுடைய பாணமாகவும் அவதரித்தார்கள் என்பதாம். ஈண்டுக் காண்டம் என்பது சிறப்புப் பொருளில் நின்றது.

குறிப்பு:—குளிர் காலத்தை உணவாக வுடைய விஷ்ணு என்பது பாடபேதம்.

## மந்திரம் 26.

**गरुडो वट भाण्डीरः सुदामा नारदो मुनिः ।**
**वृन्दा भक्तिः प्रिया बुद्धिः सर्वजन्तु प्रकाशिनी ॥ २६ ॥**

அணியுறு பன்னக மால்வன நாரதன்
குணியெனு மன்னகு சேலனு மாகுவன்
பணிதரு பத்தியும் பாரில்வி ருந்தையாம்
மணிலுள வுயிர்தெரி மதியவன் மனைவியே. (26)

பதவுரை.

| | |
|---|---|
| गरुडः | கருடன் |
| वट भाण्डीरः | ஆலமரக் கூட்டமாயினன். |
| सुदामा | குசேலர் என்பவர் |

| | |
|---|---|
| नारदः मुनिः | நாரத முனிவராவார். |
| भक्तिः | பத்தியே |
| वृन्दा | துளப மாலையாம். |
| सर्वजन्तु प्रकाशिनी | அனைத்துயிரையும் விளக்குகின்ற |
| बुद्धिः | மதியே |
| प्रिया | மனையாளாயினள், எ-று. |

பொழிப்புரை.

கருடாழ்வாரே கோகுலத்திலுள்ள ஆலமரக்கூட்டம் ஆயினர். நாரத முனிவரே குசேலராயினர். பத்தியே துளப மாலையாகும். அனைத்தையும் விளக்குகின்ற மதியே மனைவியாளுள் என்பதாம். ஈண்டுக் கண்ணபிரான் ஏறி விளையாடுதலின் கருடன் ஆலமரமாகக் கூறப்பட்டதென்பதும், குசேலர் என்பவர் ஒரு அந்தணரென்பது முணர்க. மற்றும் "எனது மனைவி புத்தியாகவே யிருப்பாள்" என்று ஐதரேயப் பிராமணம் கூறுதலின் புத்தியே மனையாளெனக் கூறப்பட்டதென்பதுங் காண்க.

குறிப்பு:—அனைத்தையும் விஷ்ணுமயமாய்ப் பார்க்கும் மெய்யறிவு மனைவி என்பாரு முளர். (26)

## மந்திரம் 27.

**तस्मान्नभिन्ना एतास्ता आभिर्भिन्नो न वै विभुः।**
**भूमावुत्तारितं सर्वं वैकुण्ठं स्वर्गवासिनम्। इत्युपनिषत् ॥२७॥**

இங்குவர் திடுசுரா ரிவனிலும் வேறலர்
அங்குள கிருட்டின னவரினு மாறலன்
பொங்குவை குண்டமும் பொன்னுல கானதும்
தங்குறு மனைத்துமித் தரைமிசையானதே. (27)

பதவுரை.

| | |
|---|---|
| ताः | அத்தகைய தேவர்களாய் அவதரித்த |
| एताः | நந்தகோபர் முதலிய இவர்கள் |
| तस्मात् | கண்ணபிரானினின்றும் |
| नभिन्नाः | வேறலர். |
| विभुः | நிறைந்துள்ள கண்ணபிரானும் |
| आभिः | இத் தேவர்களினின்றும் |
| नभिन्नः | வேறலர். |
| वैकुण्ठं | வைகுண்டத்திலுள்ளவைகளும், |
| स्वर्गवासिनं | சுவர்க்கத்தில் வாழ்கின்றவைகளுமான |
| सर्वं | அனைத்தும் |
| भूमौ | மண்ணுலகில் |
| उत्तारितं | நன்கு அவதரித்து வந்தன. எ-று. |

பொழிப்புரை.

தேவர்களாய் அவதரித்து வந்த நந்தகோபர் முதலியோர்கள் எங்கும் நிறைந்திருக்கின்ற கண்ணபிரானைத் தவிர்த்து அன்னியரல்லர். கண்ணபிரானும் அவர்களை யொழித்து வேறலர். சுவர்க்கமும், வைகுண்டமும் அங்குள்ளவாறே மண்ணிற்கு வந்து விட்டன. அதாவது மண்ணுலகமே சுவர்க்கமும் வைகுண்டமுமாகி விளங்கிற்று என்பதாம். மற்றும், காணப்படுகின்ற உலகெலாம் கண்ணபிரானுக்கு அன்னியமல்ல, கண்ணபிரானும் அவைகளை யொழித்து வேறலர் என்பதாம். ஈண்டு, "சர்வ தேவ

மயோ ஹரி:” என ஸ்மிருதி கூறுவதையும், “அத் துவிதீய மொன்றே” என்று சுருதி கூறுவதையு முணர்க என்பதாம். உபநிடத மென்னும் சொல் முடிவின் பொருட்டாம்.

குறிப்பு :—பகவான் அவதரித்தபோதே சுவர்க்கத்தி லுள்ளார்களின் நோக்கிற்கு விஷ்ணுவாகிய பிரமம் தரையில் விளக்கமுடையதாய்த் தோன்றியது என்பாரு முளர்.

## கிருஷ்ணோபநிடதம்

முற்றிற்று.

சுப்ரமண்யோம்! சுப்ரமண்யோம்!! சுப்ரமண்யோம்!!!



ஓம்

# கிருஷ்ணஸ்தவராஜ:

ஸ்வஸம்வேத்ய ப்ரஸீத
அஸ்மதானந்தாத்மந் அநாமய
அசிந்தியஸார விஸ்வாத்மந்
ப்ரஸீத பரமேஸ்வர (1)
ப்ரஸீத துங்க துங்காநாம்
ப்ரஸீத ஶிவ சோபன
ப்ரஸீத குண கம்பீர
கம்பீராணும் மஹாத்யுதே (2)
ப்ரஸீத வ்யக்த விஸ்தீர்ண
விஸ்தீர்ணாநாம் அகோசர
குரோரார்கரீய ஸர்வேச
ப்ரஸீத ஆனந்த தேஹிநாம் (3)
ஜெய மாதவ மாயாத்மந்
ஜெய சாஶ்வத சங்கப்ருத்
ஜெய சங்கதர ஸ்ரீமந்
ஜெய நந்தக நந்தன (4)
ஜெய சக்ர கதாபாணே
ஜெய தேவ ஜனார்த்தன
ஜெயரத்ந வராபத்த
கிரீடாக்ராந்த மஸ்தக
ஜெயபட்சி பதிச்சாயா
நிருத்தார்க்க கராருண (5)
நமஸ்தே நரகாராதே
நமஸ்தே மதுஸூதன

நமஸ்தே லலிதாபாங்க
நமஸ்தே நரகாந்தக (6)
நம: பாபஹரேஸாந
நம: ஸர்வ பயாபஹ
நமஸ்ஸம்பூத ஸர்வாத்மந்
நம: ஸம்பிருத கௌஸ்துப (7)
நமஸ்தே நயனாதீத
நமஸ்தே பயஹாரக
நமோ விபின்ன வேஷாய
நம: சுருதி பதாதிக (8)
நமஸ்திரிமூர்த்தி பேதேன
ஸர்க்கஸ்தித்யந்த ஹேதவே
விஷ்ணவே த்ரிதசாராதி
ஜிஷ்ணவே பரமாத்மனே (9)
நமோஸ்து யோகித்யேயாத்மன்
நமோஸ்து அத்யாத்ம ரூபிணே
பக்திப்ரதாய பக்தாநாம்
நமஸ்தே பக்திதாயினே (10)
கோகோப கோபிகாவீதம்
கோபாலம் கோழுகோப்ரதம்
கோபைரீட்யம் கோ ஸஹஸ்ரை:
நௌமி கோகுலநாயகம் (11)
பூசனம் ஹவனம் சேஜ்யா
த்யாநம் பச்சாந் நமஸ்கிரியா
தேவேஸ ஸர்வகர்மம் மே
பவேத் ஆராதனம் தவ. (12)

# விதுரர் கூறல்.

ஹரேர் நாமைவ நாமைவ
நாமைவ மம ஜீவனம்
கலௌ நாஸ்த்யேவ நாஸ்த்யேவ
நாஸ்த்யேவ கதி ரந்யதா
ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண
கிருஷ்ண கிருஷ்ண ஹரே ஹரே

---

எவரெடி பிரஸ், சூளை, மதராஸ்.